

# நள்ளிரவில் ஒரு புதுப்பாடம்

குரொயட்ஸ் விழித்துக் கொண்டார். விழித்திருந்தால் மட்டும் போதாது என்ற உணர்வு அவரைத் தொந்தரவுபடுத்தத் தொடங்கியது. தழையத் தொடங்கிய அந்த விமானம் இன்னும் சிறிது நேரத்தில் பம்பாய் நகரத்தின் தரை தட்டும்.

தன்னுடைய சுறுசுறுப்பான நாற்பத்து நான்கு ஆண்டுகளில் குரொயட்ஸ் பல நாடுகளின் விமான நிலையங்களில் இரவு பகல் என எல்லா நேரங்களிலும் தரை தட்டியிருக்கிறார். ஜெர்மன் சினிமா வரலாற்றாசிரியர் என்கிற முறையிலும் ஃபாஸ்பைண்டர் என்ற ஜெர்மன் சினிமா மேதையின் படைப்புகளின் நிபுணர் என்ற முறையிலும் அவர் தம் குறிப்புகளையும், பல சந்தர்ப்பங்களில் சினிமாச் சுருள்கள் அடங்கிய டப்பாக்களையும் சுமந்து கொண்டு உலகத்தின் மகா ஏழை என்ற நாட்டிலிருந்து உலகத்தின் கஜானா என்ற நாடு வரை சென்றிருக்கிறார்.

இப்போது தென்னிந்தியாவிலுள்ள ஹைதராபாத் நகரத்தில் ஒரு சர்வதேசத் திரைப்பட விழா. அங்கு ஃபாஸ்பைண்டர் படங்களில் சிறப்பானவை அனைத்தையும் திரையிடத் திட்ட மிட்டிருக்கிறார்கள். அந்த நிகழ்ச்சியை நடத்தித் தரத்தான் குரொயட்ஸ் இந்திய மண்ணில் காலடி வைக்கவிருந்தார். பம்பாயில் இறங்கி வேறு விமான நிலையம் போய் ஹைதராபாத் நகரத்துக்கு வேறு விமானம் பிடிக்க வேண்டும்.

ஒரு புது நாட்டிற்குப் போவது பற்றிய பரபரப்பு அவருக்கு என்றோ அடங்கிப் போயிருந்தது. ஆனால் இந்த நள்ளிரவில் விமானம் பம்பாய் நகரத்தில் இறங்க ஆயத்தமாகும் வேளையில் அவர் மனம் தெம்பாக இல்லை.

இந்திய மக்கள் அவர் தரும் விளக்கங்களுக்கு எப்படிப்பட்ட வரவேற்பு தருவார்கள்? எந்த மாதிரியான ரசிகர் குழுவுக்கும் ஆர்வம் ஏற்படும்படியாக உரை நடத்த அவர் தேர்ச்சி பெற்றி ருந்தார். அவருடைய ஐயம், அவருடைய உரை பற்றியல்ல. ஃ

பாஸ்பைண்டரின் படங்கள் பற்றி. அதிலும் குறிப்பாக 'க்யுரல்' படம்... ஃபாஸ்பைண்டரின் கடைசிப் படம். அது தயாரிக்கப்பட்ட நாளில் உலகம் எய்ட்ஸ் நோயின் தகவல்களை அதிகம் அறிந்ததில்லை. 'க்யுரல்' படத்தின் எல்லாப் பாத்திரங்களும் எய்ட்ஸ் நோயைப் பெற்றே தீரவேண்டும் என்று செயல்பட்டார்கள். குரொயட்ஸ் வரை 'க்யுரல்' இன்னொரு ஃபாஸ்பைண்டர் படம். ஆனால் அது இந்தியாவில் காட்ட உகந்ததா? ஒவ்வொரு கலாச்சாரத்தினரும் அவரவர்களுடைய தலைகளை அவர்களேதான் அறுத்துக்கொள்ள வேண்டும். ஃபாஸ்பைண்டர் படத்தில் வரும் கணவர்கள் ஆப்பிரிக்கர்களுக்கு வெறும் அசடுகளாகத் தோன்றி னார்கள். மனைவிக்குக் காதலன் ஒருவன் இருக்கிறான் என்று தெரிந்தால் ஒரு கோடாலி கொண்டு இருவரையும் தீர்த்துக் கட்டாமல் கணவன் இராக் கண்விழித்துத் தலை மயிரைப் பிய்த்துக் கொள்வதா?

பக்கத்து வரிசைப் பயணியிடமிருந்து ஒரு செய்தித்தாள் கீழே விழுந்தது. குரொயட்ஸ் அதை எடுத்துப் பிரித்தார். இப்படித்தான் இன்னொரு விமானப் பயணத்தின் போது கீழே விழுந்த செய்தித்தாள் அவருக்கு மறக்க முடியாத அனுபவமாக முடிந்தது. அது நார்வே நாட்டின் உள்நாட்டு விமானம். அந்தச் செய்தித்தாள் நார்வீஜிய மொழியிலிருந்தது. குரொய்ட்ஸுக்கு அம்மொழி தெரியாது. ஆனால் சில எழுத்துக்கள் புராதன ஜெர்மன்மொழியின் எழுத்துக்கள் போலிருந்தன. அவரறிந்த எழுத்துக்களாகப் படித்துப் போகையில் திடீரென்று ஒரு வரியில் அவர் பெயர் இருப்பது போலிருந்தது. குரொயட்ஸ் அத் தாளைப் பத்திரப்படுத்திக் கொண்டார். ஆஸ்லோ நகரத்தில் இறங்கியபின் முதல் வேலையாக ஒரு நார்வே நண்பரிடம் கொடுத்துப் படித்துச் சொல்லச் சொன்னார். அது குரொயட்ஸ் பற்றித்தான். அவர் எழுதிய ஒரு நூலுக்கு விரிவாகவும் நுணுக்கமாகவும் விமரிசனம் இருந்தது. ஜெர்மனியில் அந்த நூல் ஐநூறு பிரதிகள் கூட விற்கவில்லை. எந்த ஜெர்மன் பத்திரிகையிலும் ஒரு சிறு குறிப்பு வெளிவரவில்லை. ஆனால் கிரீஸ் நாட்டில் அதே நூல் 10,000 பிரதிகள் விற்றது. இதோ நார்வே நாட்டில் சிறப்பானதொரு விமரிசனம்! ஞானிக்குத் தன்னூரில் மதிப்பில்லை. சினிமா ஆய்வாளர்களுக்கும் கூடத்தான்.

சர்வதேச விமான நிலையங்களுக்கு உரித்தான எண்ணற்ற காரிடார்களைக் கடந்து விசாலமான லவுஞ்ஜுக்குத் தன் ஆறு சாமான்களுடன் வந்து சேர்ந்த குரொயட்ஸ் ஒரு நிமிடம் நின்று ஆசுவாசப் படுத்திக்கொண்டார். ஆறில் மூன்று பெரிய 'ஜம்போ' சினிமாச் சுருள்கள் கொண்ட டப்பாக்கள்.

இந்தியாவின் இதர ஊர்களுக்குச் செல்ல அவர் பம்பாயிலேயே இன்னொரு விமான நிலையத்துக்குச் செல்ல வேண்டும் என்று கூறியிருந்தார்கள். தனக்குப் பயணச்சீட்டு தந்த விமான ஏர்லைன்ஸ் நபர் யாராவது கிடைப்பானா என்று குரொயட்ஸ் பார்த்தார். அவருடன் வந்த இதர பயணிகள் எல்லாரும் ஆனந்தமாக எங்கெங்கோ சிதறியிருந்தார்கள். குரொயட்ஸ் தன் பெட்டிகளைத் தூக்கிக்கொண்டு ஏர்லைன்ஸ் அலுவலகப் பகுதிக்குச் சென்றார். அது மூடியிருந்தது. குரொயட்ஸ் மீண்டும் லவுஞ்ஜுக்கு வந்து எல்லாம் தெரிந்தவன் போலத் தோன்றியவன் ஒருவனை, "இன்னொரு ஏர்போர்ட் போவதற்கு லூப்தான்ஸா பஸ் இருக்கிறதா?" என்று விசாரித்தார்.

"லூப்தான்ஸா பஸ் எதற்கு? வேறு எவ்வளவோ பஸ்கள் இருக்கின்றனவே?" என்று அவன் சொன்னான்.

"லூப்தான்ஸாவில் நான் பணம் தர வேண்டியிருக்காது."

"உங்களிடம்தான் விமான டிக்கெட் இருக்கிறதே?"

"உங்களுக்குத் தெரியுமா? நான் பணம் தர வேண்டாமா?"

"நிச்சயமாகப் பணமே வேண்டாம்."

அந்த மனிதனின் மீசை அச்சமூட்டுவதாக இருந்தாலும் குரொயட்ஸ் சொன்னார்: "அவர்கள் இந்திய நாணயத்தில் கட்டணம் கேட்டால் என்னிடம் கிடையாது. நான் இங்கேயே மாற்றிக் கொள்கிறேன்."

"இங்கே ஏன் மாற்றுகிறீர்கள்? உங்கள் ஹோட்டலில் செய்யுங்கள். அல்லது வேறு பாங்கில் மாற்றிக் கொள்ளுங்கள். ஏர்போர்ட்டில் மட்டும் உங்கள் டாலர்களை வெளிக் காட்டாதீர்கள்."

"ஏர்போர்ட்டில்தான் பாங்க் இருக்கிறதே?"

"ஆஹா, மாற்றக் குறைந்தது ஒரு மணி நேரமாவது ஆகும்."

அந்த மனிதன் கூறியது சரி என்பது போல பாங்க் ஜன்னல் முன்னால் ஒரு நீளமான கியூ இருந்தது. அதைவிடச் சோர்வு தந்தது, ஜன்னலுக்குப் பின்னால் யாருமில்லாதிருந்தது.

அந்த நேரத்தில் ஒரு மனிதர், "பஸ் கிளம்பப் போகிறது," என்று அவரைத் தள்ளிக்கொண்டு போனார்.

"எங்கே?" என்று குரொயட்ஸ் கேட்டார்.

அந்த மனிதர் திரும்பி, "இன்னொரு விமான நிலையத்துக்கு," என்று சொல்லிவிட்டு ஓடினார். கட்டுண்டவர் போல குரொயட்ஸ் தன் சாமான்களைத் தூக்கிக்கொண்டு வேகமாக அந்த ஆளைப் பின்பற்றினார்

விமான நிலையத்தின் திறந்த வெளிப் பகுதியில் ஒரு பஸ் நின்று கொண்டிருந்தது. குரொயட்ஸ் அரும்பாடுபட்டுத் தன் சாமான்களை பஸ்ஸின் கதவு வழியாக உள்ளே தள்ளினார். சீருடை அணிந்த ஒருவன் எல்லாப் பயணிகளையும் விட்டுவிட்டு அவரிடம் மட்டும் வந்தான். "டிக்கெட் இருக்கிறதா பஸ்ஸுக்கு?"

"நான் வாங்குகிறேன். டாலர் கொடுக்கலாமல்லவா?"

"கீழே இறங்குங்கள். இங்கே இந்திய நாணயம்தான்."

பஸ்ஸின் பின்புறத்துச் சிவப்பு விளக்கு கண்ணிலிருந்து மறையும் வரை குரொயட்ஸ் அங்கு நின்றார். விமான நிலையத் தினுள்ளேயே சென்றுவிடலாம் என்று முடிவு செய்தார். அப்போது மிக உயரமான ஒருவன் அவரிடம் வந்து, "லூப்தான்ஸா பஸ்தானே, இங்கே இருக்கிறது'' என்றான். அவர் பதில் சொல்லும் முன் அவருடைய இரு பெரிய பெட்டிகளைத் தூக்கிக் கொண்டான்.

"எங்கே?" என்று குரொயட்ஸ் கேட்டார்.

"அதோ," என்றான். அவன் காட்டிய திசை ஒரே இருட்டாக இருந்தது.

குரொயட்ஸ் தட்டுத் தடுமாறி அந்த ஆளைப் பின் தொடர்ந்தார். "ஏன் இவ்வளவு தூரத்தில் நிறுத்தி வைத்திருக் கிறீர்கள்?" என்று கேட்டார். அந்த ஆள் அவருடைய பளுவான பெட்டிகளைத் தூக்கிக் கொண்டிருந்தாலும் வெகு விரைவாகப் போய்க் கொண்டிருந்தான். குரொயட்ஸுக்கு மூச்சு வாங்கியது.

அவர்கள் அநேகமாக சாலைக்கே வந்துவிட்டார்கள். ஒரு கார் இருட்டில் நின்று கொண்டிருந்தது. அந்த ஆள் அவருடைய பெட்டிகளைக் காரின் டிக்கியில் வைத்தான்.

''இதுவா லூப்தான்ஸா வண்டி?'' என்று குரொயட்ஸ் கேட்டார்.

"ஆமாம், தாருங்கள் உங்கள் கையிலிருப்பதையும்" அவன் அத்தனை பொருள்களையும் டிக்கியில் அடுக்கி வைத்தான். காரின் கதவைத் திறந்து, "ஏறுங்கள்" என்றான்.

குரொயட்ஸ் தலையைக் குனிந்து வண்டியினுள் ஏறப் போனார். உடனே வண்டியினுள்ளிருந்து இரு முரட்டுக் கைகள் அவரை உள்ளே இழுத்தன. உண்மையில் நான்கு முரட்டுக் கைகள். அவரை உள்ளே இழுத்துக் கதவை மூடிய பின் கத்தி போன்றது ஒன்று அவருடைய கழுத்தைத் தொட்டுக்கொண்டு இருந்தது. அந்த உயரமான ஆள் நிதானமாக, "தயவு செய்து சத்தம் போடாதீர்கள்" என்றான். வண்டி கிளம்பியது

குரொயட்ஸ் பதறவில்லை. எவ்வளவு சினிமாக்களில் இதே மாதிரிக் காட்சிகள் வந்திருக்கின்றன! ஐரோப்பிய நகரங்களில் பலமுறை அவர் பர்ஸ் போயிருக்கிறது. வழிப்பறி நடந்திருக்கிறது.

ஒருமுறை அவருடைய காரின் கண்ணாடியை உடைத்து அவருடைய நீச்சலுடையை ஒருவன் திருடிப் போயிருந்தான். திருடு போனதைவிட அந்தக்கண்ணாடிதான் அவருக்கு நிறையச் செலவு பிடித்தது.

இருட்டாயிருந்தாலும் நெருக்கடி எற்படும்போது ஒரு புது ஆற்றல் செயல்படுகிறது. வண்டியில் அவரைத் தவிர நான்கு பேர் இருக்கிறார்கள். தனித்தனியாக அவர்களில் ஒருவனும் அவருடைய ஒரு கைக்குத்தைக்கூடத் தாங்க மாட்டான். ஆனால் ஆயுதங்கள் வைத்திருப்பவர்களிடம் என்ன செய்ய முடியும்?

''எங்கே கொண்டு போகிறீர்கள்?'' என்று குரொயட்ஸ் கேட்டார்.

"நீங்கள் இன்னொரு விமான நிலையம் போக வேண்டும் என்றீர்களே, அங்குதான். ஒரு விஷயம். இந்த வண்டியில் கட்டணம் அமெரிக்கப் பணத்தில்தான். இருபது டாலர் எடுக்கிறீர்களா?"

"என்ன?"

''ஒன்றுமில்லை, இன்னொரு விமான நிலையத்திற்கு அழைத்துச் செல்ல இருபது டாலர் கட்டணம். நீங்களாக எடுக்கிறீர்களா அல்லது உங்கள் பக்கத்தில் இருக்கும் நண்பரை உங்களுக்கு உதவச் சொல்லட்டுமா?"

குரொயட்ஸ் டிரௌஸர் பாக்கட்டினுள் கையைவிட்டார். உதிரியாக இருநூறு டாலர்களுக்கு மேல் அதில் இருந்தது. 'டிராவலர்ஸ் செக்' கோட்டின் உள் பையில் இருந்தது. இப்போது இவர்களுக்கு அவர் பணம் வைத்திருக்கும் இடம் தெரிந்து போய்விடும். அவரிடம் இருப்பதை எல்லாம் பிடுங்கிக்கொள்ள எவ்வளவு நேரமாகப் போகிறது?

குரொயட்ஸ் விரல்களை நோட்டுகளிடையே புரட்டினார். அமெரிக்க நோட்டுகளில் ஒரு சங்கடம் என்னவென்றால் ஒரு டாலர், பத்து டாலர், ஐம்பது டாலர், நூறு டாலர் எல்லாமே ஒரே அளவு. எப்படி என்று இருபது டாலர் நோட்டை மட்டும் எடுப்பது? கார் போகும் பாதை கும்மிருட்டாக இருந்தது. எங்கோ வெகு தூரத்தில் சில விளக்குகள் தெரிந்தன. ஆனால் அவற்றால் ஒரு புண்ணியமும் இல்லை.

ஒரு சூதாடிக்குரிய மனநிலையில் குரொயட்ஸ் மூன்று நோட்டுகளை வெளியே உருவி எடுத்தார். கடவுளே, இவை அனைத்துமே ஐந்து, பத்து டாலர் நோட்டுகளாக இருக்கக் கூடாதா?

கத்தி வைத்திருந்தவனிடம் ஏதோ சொல்ல அவன் ஒரு சிகரெட் லைட்டரைக் கொளுத்தினான். ஒரு கணத்தில் எல்லாருடைய

முகங்களும் தெரிந்தது. அந்த உயரமான ஆள் குரொயட்ஸை உற்றுப் பார்த்தான. குரொயட்ஸுக்கு ஒருமுறை மூச்சு தவறியது. கையிலிருந்த மூன்று நோட்டுகளில் நூறு டாலர் நோட்டுகள் இரண்டு. மூன்றாவது ஒரு இருபது டாலர் நோட்டு.

லைட்டர் ஆள் நொடியில் இருபது டாலர் நோட்டைப் பிடுங்கிக்கொண்டு லைட்டரை அணைத்தான். குரொயட்ஸ் அடுத்த கணத்துக்குக் காத்திருந்தார். இந்த இருநூறை இன்னொருவன் பிடுங்கப் போகிறான். அடுத்தவன் பையில் இருக்கும் மீதிப் பணத்தை எடுக்கப் போகிறான். அவர் அணிந்திருந்த கோட் தோலினாலேயே தைக்கப்பட்டது. அதுவே ஆயிரம் டாலர் பெறும். அப்புறம் அவருடைய 'செக்'குகள், கடிகாரம், பேனா, உயிர்... சினிமாவுக்கும் வாழ்க்கைக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்? சினிமாவில் கதாநாயகன் இந்த நான்கு பேர்கள் என்ன? பதினான்கு பேர்கள் இருந்தாலும் சமாளித்துத் தப்பி விடுவான். அதிலும் ஐரோப்பியப் படங்களில் கதாநாயகன் வெறும் அனாமதேயங்களிடம் அடிபடுவது என்றே கிடையாது. அவன் சாகத்தான் வேண்டுமென்றால் அவன் நிராகரித்த பெண் 'பாயிண்ட் பிளாங்க்' தூரத்தில் சுடுவாள்...

கார் திடீரென்று ஒரு வரப்பு மீது ஏறுவது போலச் சீறிப் பாய்ந்து இரு பெரிய குலுக்கல்களுக்குப் பிறகு நின்றது. நல்ல வேளை கத்தி வைத்திருந்தவன் சற்றுக் கவனமாகவே இருந்தான். குரொயட்ஸ் ஓரக்கண்ணால் வெளியே பார்க்க முயன்றார். நூறு கஜ தூரத்தில் வரிசையாகப் பிரகாசமான விளக்குகள்.

விளக்குகள் வரிசையாக இருக்கும் போதுதான் எவ்வளவு அழகாக இருக்கின்றன! எவ்வளவு விளக்குகள் இருக்கும்? இருபது? முப்பது? ஐம்பது? இந்த விளக்கு வரிசைக்கு முடிவே இல்லை போலிருக்கிறதே! தொடுவானத்திற்கு அப்பாலும் சென்று இந்த பூமிக் கோளத்தையே சுற்றி வருமோ? இவ்வளவு விளக்குகள் கண்ணுக்குத் தெரிந்தும் என்ன பயன்? இங்கே ஒருவர் முகமும் கண்ணுக்குத் தெரியவில்லை. இந்த வழிப்பறிக் காரர்கள் வழிப்பறிக்காரர்களாக மட்டும் இருக்க வேண்டும். பணம், உடை, உடைமைகள் போய்விடுவது கூடப் பரவாயில்லை. உடலெல்லாம் கத்திக் குத்துக் காயங்களுடன் இங்கேயே மல்லாந்து கிடத்திவிடக் கூடாது.

"இறங்குங்கள்" என்று உயரமான ஆள் சொன்னான்.

"இது என்ன இடம்?"

"இதுதான் இன்னொரு விமான நிலையம். சாண்டாகுரூஸ்."

உயரமானவன் முதலில் இறங்கிக் கதவைத் திறக்க, குரொயட்ஸ் ஒரு காலை வெளியே எடுத்து வைத்து இறங்கினார். "பத்திரம்,

தலை பத்திரம்" என்று அவன் சொன்னான். எல்லாருமே வெளியே இறங்கி விட்டார்கள். அங்கும் இருட்டு தான்.

குரொயட்ஸ் இருநூறு டாலரை டிரவுசர் பையில் நுழைத்துக் கொண்டார். "நான் போகலாமா?" என்று கேட்டார்.

"கொஞ்சம் இருங்கள். இரண்டு நிமிஷம்" என்று உயரமான ஆள் சொன்னான்.

"ஏன், இன்னும் என்ன?"

"ஏர்போர்ட்டிலிருந்து தள்ளுவண்டி கொண்டு வரப் போயிருக்கிறான். இதோ வந்து விடுவான்."

குரொயட்ஸ் சுற்றும் முற்றும் பார்த்தார். வானத்தில் தென்—பட்ட ஏராளமான நட்சத்திரங்களின் தொடர்ச்சியாக சாண்டா குரூஸ் விமான நிலைய விளக்குகள் தெரிந்தன. அத்துவானமான இடம். விமானநிலையம் அத்துவானத்தில் இல்லாமல் வேறெங்கு இருக்கும்?

கடகட வென்று சிறு சக்கரங்கள் உருளும் சப்தம் அவர்களை நெருங்கியது. தள்ளுவண்டிக்காகப் போனவன் திரும்பி வந்துவிட்டான்.

அந்த நான்கு பேரும் குரொயட்ஸின் பெட்டி முதலானவற்றைத் தள்ளுவண்டியில் அடுக்கி வைத்தார்கள். அந்த உயரமானவன் ஒருமுறை விரல்களைச் சொடுக்க அவனுடைய கூட்டாளிகள் காரில் ஏறிக் கொண்டார்கள். அவன் குரொயட்ஸ் பால் கையை நீட்டினான்.

"நாங்கள் போய் வருகிறோம். குட்பை."

அவனும் வண்டியில் ஏறிக்கொள்ள கார் குரொயட்ஸைப் பிரதட்சிணமாக வந்தது. அவரைக் கடக்கப் போகும் தருணத்தில் அந்த உயரமான ஆள் மீண்டும் சொன்னான். "குட் பை, சார், ஜாக்கிரதையாகப் பார்த்துப் போங்கள்."

அந்த வண்டியின் பின்புறத்துச் சிவப்பு விளக்குகளும் கண்ணிலிருந்து மறையும் வரை குரொயட்ஸ் நின்றார். பிறகு தள்ளுவண்டியை விமான நிலைய திசையை நோக்கித் தள்ளிக் கொண்டு போனார்.

1986